8th December 1961]

*Hospitals for Panchayat Unions*

* 2191. *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப் பாரா—

தற்போது புதிதாக பிரிக்கப்பட்டுள்ள பஞ்சாயத்து யூனியன் களின் எல்லைக்குள் 20 படுக்கைகளுடன் ஒரு ஆஸ்பத்திரி, பிரசவ விடுதி முதலியன வைக்கத் திட்டமிருக்கிறதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : No. Sir.

SRI N. R. THIAGARAJAN : ஸார், வைத்திய வசதி சம்பந்த மாக இனிமேலாவது திட்டமிட்டு அசெம்பிளி மெம்பர்களுக்குத் தெரிவிக்க முடியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : திட்டம் ஏற்கெனவே இருக்கிறது. ப்ரைமரி ஹெல்த் செண்டர்ஸ் 141-க்கு ஸாங்ஷன் ஆகி யிருக்கிறது. இதிலே 118 வேலை செய்கிறது. இன்னும் 220 ப்ரை மரி ஹெல்த் செண்டர்கள் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் திறக்க உத்தேசமிருக்கிறது. அதோடு ரூரல் டிஸ்பென்ஸரி 379 இருக்கின்றன. இன்னும் கவர்ன்மெண்ட் டிஸ்பென்ஸரிஸ் 78 இருக்கின்றன. ஆகையால் இவை பூராவும் இந்த மாதிரி வைத்திய வசதிக்கு ஏற்பாடு செய்யப்பட்டவைகள். புதிய பஞ்சாயத்து ஆக்ட் பிரகாரம் டிஸ்பென்ஸரீஸ் பஞ்சாயத்து யூனியனுக்குச் சேருகிறது. பெட் இருந்தால் கவர்ன்மெண்ட் எடுத்துக் கொள்ளும். இந்த முறையில் பார்த்தால் எல்லாப் பிராந்தியத் திலும் வைத்திய வசதிக்கு ஏற்பாடு இருக்கிறது.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : There is no point in going on constructing buildings when there is no medicine in some of the existing hospitals. So, may I know whether there is any proposal with the Government to supply adequate quantities of medicines to the existing hospitals side by side with construction of buildings?

THE HON. SRI M. A. MANICKAVELU : மருந்து இல்லை என்பது சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் இல்லை. ஸ்தல ஸ்தாபன ஆஸ்பத்திரிகளில் இல்லாமல் இருக்கலாம்.

SRI S. M. ANNAMALAI : ப்ரைமரி ஹெல்த் செண்டர்களில் உள்ள படுக்கைகளை மேலும் அதிகப்படுத்த—20 படுக்கைகளாக உயர்த்த—சர்க்காரிடம் ஏதாவது திட்டம் இருக்கிறதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்போது இருக்கிற திட்டப் பிரகாரம் எமெர்ஜென்ஸி பெட் என்று 6 பெட்ஸ் இருக் கின்றன. இப்போது ஒரு சப்-கமிட்டி அகில இந்திய ரீதியில் ப்ரைமரி ஹெல்த் செண்டர் 70,000 மக்களுக்கு வசதி செய்ய வேண்டுமென்று இருப்பதை, பெரிதாக இருக்கிறது என்று குறைக் கவும், அல்லது ஒரு டாக்டர் என்று இருப்பதை இரண்டு டாக்டர்

[8th December 1961

போடுவதா என்பதைப் பற்றியும், படுக்கைகளை அதிகப்படுத்துவதைப் பற்றியும் சப்-கமிட்டி முடிவுக்கு வந்த பிறகு திருத்தி அமைக்கலாம் என்று சர்க்கார் நினைக்கிறது.

**Sri M. S. SELVARAJAN :** ஸார், ஜில்லா போர்டுக்குச் சொந்தமான சில ஆஸ்பத்திரிகளில் பேறுகால விடுதியும், வியாதியஸ்தர்கள் தங்கியிருந்து சிகிச்சை பெறும் அறைகளும், ஜனங்களே உதவி செய்து கட்டி, அவர்கள் அங்குள்ள ஆஸ்பத்திரிகளில் தங்கி சிகிச்சை பெறும் வியாதியஸ்தர்களுக்குத் தாங்களே அன்றாடச் செலவுத் தொகைகளைக் கொடுத்துக்கொண்டிருக்கும் அத்தகைய ஆஸ்பத்திரிகளை சர்க்கார் கைக்கு எடுத்துக் கொள்ளுவதில் தடை இருப்பது உண்மைதானா? அரசாங்கமே நேரடியாக இப்படிப்பட்ட மருத்துவ விடுதிகளில் வியாதியஸ்தர்களுக்கு உணவு சப்ளை செய்தால்தான் அரசாங்கத்தின் கைக்கு மாற்றப்படும் என்ற விதி இருப்பது வாஸ்தவமா? உணவுக்குக்கூட ஜனங்களே உதவிக் கொள்ளும் இத்தகைய ஆஸ்பத்திரிகள் அரசாங்கத்தின் கையில் இருப்பதுதான் சிறந்தது என்று கருதி இவைகளை சர்க்காரின் கைக்கு மாற்றிக்கொள்வதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** இப்போது இருக்கின்ற விதிப் பிரகாரம் மருந்து கொடுக்கும் நிலயமாக இருந்தால் பஞ்சாயத்து யூனியனில் சேரும். படுக்கை இருந்தால் சர்க்கார் எடுத்துக்கொள்ளவேண்டும். சாப்பாடு கொடுக்கும் விஷயம் பற்றி எனக்குத் தெரியவில்லை. அதன் இண்டர்ப்ரிட்டேஷன் என்ன என்று தெரியவில்லை. படுக்கை இருந்தால் எடுத்துக் கொள்ளவேண்டும் என்றுதான் இருக்கிறது. அதாவது அங்கேயே தங்கியிருந்து சிகிச்சை எடுத்துக்கொள்ளுவதை அரசாங்கமே மேற்கொள்ளவேண்டும் என்று விதி இருக்கிறது. அதுதான்.

*State Broadcasting Department*

*** 2192 Q.—Sri S. M. ANNAMALAI :** கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

9-00 p.m.

(அ) மராமத்து இலாகா ஒலிபெருக்கி பிரிவு கலைக்கப்பட்டு விட்டதா?

(இ) அப்படியானால், எத்தனைபேர் வேலை இழந்தனர்?

(உ) அவர்களுக்கு மீண்டும் வேலைதர என்ன ஏற்பாடுகள் செய்யப்பட்டன?

**The Hon. Sri P. KAKKAN :** (அ) Yes, Sir. The State Boardcasting Department has been wound up with effect from 1st September 1961 and the work of installation and maintenance of community radio sets has been taken over by a new organisation called the Panchayat Radio Organisation directly under the control of the additional Development Commissioner. A residuary set up is however, being retained under the P.W.D. for attending to work connected with installation of Public Address System, etc.